*Kumaraṉ*

*Āram 20, muttu 50*

*July 29, 1943*

Record no. 313

REGD. NO. M. 1823. 6 பக்கங்கள். விலை 0—2—0

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
ஆறு மாதம் 3—8—0
சிலோன் ரூ. 6—0—0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 8—0—0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், போர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2—0—0
வியாபார சம்பந்தமானது ரூ. 1—0—0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 20 | காரைக்குடி சுபானு-ஞு ஆடி-மீ 13-உ (29—7—43) | முத்து 50

## மனை மாட்சி

(திருமதி மு. மரகதவல்லி அம்மாள்)

இல்லறவாழ்க்கையைச் சிறப்புறச் செய்வது மனைமாட்சி. இது பழந்தமிழர் கொண்ட உயர்ந்த கொள்கை. இதனாலேதான் திருவள்ளுவரும் மங்கலமென்ப மனைமாட்சி யென்று வலியுறுத்தியிருக்கின்றார். குடும்ப வாழ்க்கையின் பெருமை, மனையாளுடைய உயர்ந்த குணங்களிலேயே அடங்கியிருக்கின்றது. வேறு எல்லாவிதமான செல்வங்களிருந்தாலும், இல்லுக்கு உரியவளான இல்லாளிடம், மனைக்குரிய மாண்பு — உயர் குணங்களில்லா விட்டால் வாழ்க்கையில் யாதொரு நற்பயனையும் அடைய முடியாது என்று வள்ளுவர் கூறுகின்றார்:

மனைமாட்சி இல்லாள்கண்
இல்லாயின், வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும், இல்.

பழந்தமிழ் இலக்கியங்களிலே இத்தகைய மாண்புடைய பெண்மணிகள் பலரைக் காண்கின்றோம்.

காரைக்காலிலே பிறந்த புனிதவதியாரைப்பற்றிச் சேக்கிழார் அறிவிக்கிறார். தனதத்தனார் என்ற பெருஞ் செல்வர்க்கு மகளாகப் பிறந்தார். பரமதத்தன் என்பவருக்கு மணமுடிக்கப் பெற்றார்: காதல் பெருகவும், மனையறத்தின் பண்பு தவறாமலும் இருவரும் இல்லறம் நடத்திவந்தனர்.

ஓங்கிய அன்புறு காதல்,
ஒழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில் வருமனையறத்தின்,
பண்புவழாமையிற் பயில்வார்

என்கிறார் ஆசிரியர். இப்படி இருவரும் ஒருமனப்பட்டவராய் இல்லறம் நடத்திவரும் நாளில், புனிதவதியாரின் தெய்வபக்தியையும், அவருடைய பேரறிவையும் மனிதசக்தியை மீறிய செய்கைகளையுங்கண்டு பரமதத்தன் அச்சங்கொண்டான்.

இவளை நாம் மனைவியாகக் கொள்வது. நமக்குத் தகுதியல்ல வென்று கருதினான். ஆனால் அந்தக் குறிப்பை வெளிக்குக் காட்டாமல், எவர்க்கும் சொல்லாமல் அம்மையாருடன் தொடர்பின்றிச் சிலநாள் வாழ்ந்தான். பின்னர் வியாபார நிமித்தம், மரக்கலமேறி வேறிடம் சென்று இன்னொரு வணிகன் மகளை மணம் செய்து வாழ்ந்தான். அவர்கட்கு ஒரு பெண்மகவு பிறந்தது. அதற்குப் புனிதவதி யென்று பெயரிட்டான்.

பரமதத்தன் மற்றோர் பெண்ணை மணந்து வாழ்கின்றான் என்ற செய்தி புனிதவதியாரின் தந்தைக்கு எட்டியது. அவனிருப்பிடத்திற்குத் தன் மகளை அழைத்துச் சென்று சேர்ப்பது எனப் புறப்பட்டான். பரமதத்தன் வாழும் ஊர் போய்ச் சேர்ந்ததும் அவனுக்குச் செய்தியனுப்பினர். பரமதத்தன், என்ன நேருமோ என்றஞ்சி தன் மனையாளையும், மகளையும் அழைத்துக்கொண்டு வந்து, புனிதவதியாரின் முன்பு விழுந்து வணங்கினான். ஒருவருக்கும் அவன் செயல் விளங்கவில்லை. 'ஏன் மனைவியை வணங்குகிறாய்?' என்று கேட்டனர். 'இவர் மானுடரல்லர்; நற்பெரும் தெய்வம்; அவர் பொற்பதம் பணிந்தேன்: நீரும் போற்றும்' என்று மற்றோர்க்கும் சொன்னான். புனிதவதியாரின் அளவிலாப் பெருமையை அறிந்து எல்லோரும் வியந்தனர். புனிதவதியார் இதுகாறும் தன் கணவனைக் கணவனாகவே மதித்து, மனத்திலிருத்திவந்தார். அவன் மறுமணம் புரிந்துகொண்டான் என்பதறிந்தும் சினங்கொள்ளவில்லை. அவன் எக்காரணங்கொண்டு தன்னை வெறுத்தான் என்பதும் அவருக்குத் தெரியாது: உள்ளம் சதா தெய்வ பக்தியில் ஈடுபட்டிருந்தது என்றாலும், இந்த உடல் கணவனுக்காக ஏற்பட்டதென்ற உணர்ச்சியை மறக்கவில்லை; மறுக்கவுமில்லை. சிறந்த இல்லாளாகவே அவனோடு வாழ்க்கை நடத்த விருப்பங் கொண்டிருந்தார்.

கணவனுக்காகச் சுமந்து வந்தவை இந்த சரீரமும் வனப்பும். அவன் வேண்டாமென்று மறுக்கும்போது, இனியும் இந்த வனப்பைச் சுமக்க வேண்டியதில்லை; தேவையற்ற இந்த தசைப்பொதி ஒரு சுமை. இதை ஒழித்துவிட வேண்டியதுதான் என்று கருதிக் கழித்தாரென்று கூறப்படுகிறது.

ஈங்கிவன் குறித்த கொள்கை
இதுஇனி இவனுக்காகத்
தாங்கிய வனப்பு நின்ற
தசைப்பொதி கழித்திங் குன்பால்
ஆங்குநின் தாள்கள் போற்றும்,
பேய்வடி வடியேனுக்குப்
பாங்குற வேண்டுமென்று
பரமனை வேண்டிநின்றார்

என்று சேக்கிழார் பாடுகின்றார். கணவனை இழந்தால் பெண்கட்குப் பேய் வடிவு இருப்பது நல்லது போலும்.

அடுத்தபடியாகக் கண்ணகியைப் பார்க்கலாம். கண்ணகி கதை எல்லோர்க்கும் தெரிந்ததுதான். அவருடைய பெருமை எவ்வாறு விளங்கியது? இளம் பருவத்திலே அவளைக் கோவலன் மணமுடித்தான். ஆனால் நீண்டநாளிருந்து இல்லறம் நடத்தவில்லை. நாடகக்கணிகையாம் மாதவியை விரும்பித் தன்பாலுள்ள பலவகைப் பொருள்களையும் நாள்தோறும் கொடுத்து, அவளுடனே வாழ்ந்தான். கண்ணகி இதுகண்டு, அவன் மீது வெறுப்புக் கொள்ளவில்லை. மாதவியையுங்கூட நொந்ததாகத் தெரியவில்லை. கோவலன் மாதவியிடம் வெறுப்புக்கொண்டு தன் வீட்டை அடைந்தான். அங்கே கண்ணகியின் வாடிய மேனியையும், வருந்திய மனத்தையும் கண்டு, தன் பிழையை உணர்ந்தான். அவளுக்குப் பெருந்தீங்கிழைத்து விட்டோமென்று வருந்தி

(6-ம் பக்கம் பார்க்க)

* இக்கட்டுரை 11—7—43 அன்று திருச்சி ரேடியோவில் ஒலிபரப்பப்பட்டது. ரேடியோ நிலைய அதிகாரியுடைய அனுமதியோடு இங்கு வெளியிடப்படுகிறது.

குமரன்

காரைக்குடி
சுபானு-ஹு ஆடி-மீ 13உ

## அடுத்து வரும் நெருக்கடி

சண்டை நெருக்கடி சிறிது தளர்வுறுவது போல் செய்திகள் வருகின்றன. இத்தாலியில் முசோலினியார் அந்த தேச ராணுவத்தால் கைது செய்யப்பட்டிருக்கிறார் என்ற செய்தி வியப்பாக இருக்கிறது. தேசாதிபதியாக—சர்வாதிகாரியாக—ராணுவத்தின் ஒப்பற்ற தலைவராக நேற்று இருந்து அபிஸீனியாவரைப் போரிட்டுப் பிடித்த முசோலினி இன்று அவருடைய நாட்டில் அவருடைய ராணுவத்தால் சிறையிடப்படுகிறார். சண்டை நிலைமை அதிசயமாக மாறிவருகிறதென்பதில் ஐயமில்லை.

ஆனால் இங்கே அரிசிக் கட்டுப்பாடு எதிரே நிற்கிறது. ஆகஸ்ட் 1உ முதல் காரைக்குடியில் அரிசிக் கட்டுப்பாடு அமுலுக்கு வரவிருக்கிறது. காரைக்குடி நகரத்திலுள்ளவர்களுக்கு ஒரு வாறு கட்டுப்பாட்டின்படி வினியோகம் நடைபெறுதல் கூடும். பக்கத்து ஊர் ஜனங்கட்கு இந்த வினியோகத்தில் பங்கு கிடைப்பதற்கில்லை. காரைக்குடியில் அரிசி வாங்கித்தான் சாப்பாடு நடக்கவேண்டுமென்றிருக்கிற ஜனங்களின் தொகை பதினாயிரக் கணக்காகும். காரைக்குடியில் பங்கீடு ஏற்பட்டால் கட்டாயம் அரிசி வியாபாரம் காரைக்குடியில் நடப்பதும் தடைப்படுமென்பதி லையமில்லை. அப்படியானால் பக்கத்து ஊர்களிலுள்ள ஜனங்கட்கு வழியென்ன? அதைக் கவனிக்காமல் விட்டால் அன்றாடம் கூலிவேலை செய்து சம்பளம் வாங்கி அரிசி வாங்குகிற நிலைமையிலுள்ள ஜனங்கள் என்ன கதிக்காளாவது என்பதைக் கவனிக்க வேண்டும். நாடு முழுமையும் உணவுப் பொருள் நெருக்கடி ஏற்படக்கூடிய அறிகுறிகள் உள்ளன. கல்கத்தாவில் உணவின்றிப் பட்டினியால் தெருக்களில் செத்துப் பிணங்கள் ஏராளமாகக் கிடப்பதாக ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. பெஜவாடாவில சென்னை கவர்னர் உணவுப் பொருள் நிலைமையைப்பற்றிக் குறிப்பிட்டிருப்பது பின் வருமாறு:—

"சென்னை மாகாணத்தில் அரிசிக் குறைவு ஏற்பட்டுவிட்டது. இதனால் அடுத்த சில மாதங்களில், சில ஜில்லாக்களில் உணவுப் பொருள் நெருக்கடி அதிகரிக்கும். அதிர்ஷ்டவசமாக பெஜவாடா அதிக உணவுப் பொருள் ஜில்லாவாக விருக்கிறது. அதிகப்படியாயுள்ள அரிசி இதர குறைந்தவிடங்களில் கிடைக்கும்படி செய்ய அதிகாரிகளுடனும் தான்யம் வாங்கும் அதிகாரியுடனும் ஒவ்வொருவரும் ஒத்துழைப்பர்களென நம்புகிறேன்."

நமது ஜில்லா அரிசி குறைந்த ஜில்லா என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எப்படியும் வெளி ஜில்லாவிலிருந்துதான் மாதாமாதம் அரிசி வந்தாகவேண்டும். இங்கேயுள்ள நெல் சொற்பந்தான். அதுவும் எங்கெங்கோ இருக்கிறது. தினப்படி வாங்கவேண்டியவர்களாக இருக்கும் ஏழைகட்கு வழியென்னவென்பதை அவசரமாக அதிகாரிகள் முடிவு செய்து ஒவ்வொருவருக்கும் கிடைக்கும்படி செய்ய முற்படவேண்டிய அவசியமாகும்.

இந்த ஆண்டு வெள்ளாமையின் ஆரம்பகாலம் தொடங்கியது. தரிசு கிடவாமல் புன்செப் தான்யங்களை உற்பத்தி செய்ய முற்படவேண்டிய அவசியம். நிலமுடையவர்களும் பணமுடையவர்களும் இந்த வழியில் கடைக்கண் செலுத்த வேண்டும். உணவுப் பொருள்களில் எதை உற்பத்தி செய்தாலும் பிரயோஜனகரமாக இருக்குமென்பதில் தடையில்லை. நல்ல விலையுமிருக்கிறது. வேளாண்மையில் நஷ்டம் வருமென்ற பேச்சுக்கு இந்த வருஷத்தில் இடமே இல்லை. ஆனால் லாபந்தான் என்று கூறுவதிலும் தடையில்லை. நம்முடைய ஜில்லாவில் உற்பத்தி செய்யப்படும் உணவுப்பொருளே நமக்கு சரியானபடி உதவியளிக்கக் கூடுமென்பதை இந்த வருஷத்தில் நன்றாக உணர்ந்துவிட்டோம்.

## உள்ளூர்ச் செய்தி

### ரோடு அபிவிருத்தித் திட்டம்

பிரஸ்தாப வருஷத்திற்கு ரோடு அபிவிருத்திக்காக சர்க்கார் லோன் நஷ்டஈடாக ரூ. 29,850 நகர சபைக்கு அனுமதித்துள்ளனர். இவ்வருடம் நகரிலுள்ள 10 மைல் நீளமுள்ள தார் ரோடுகளை நல்ல நிலைமையில் வைப்பதற்கு வேண்டிய தாருக்கு ஆர்டர் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சில செம்புரான் கல் ரோடுகள் கமிஷனரின் திட்டப்படி வெள்ளைக் கல் ரோடுகளாக மாற்றப்படும். தற்பொழுது கன்னாடுமுக்குமிடம் மிகவும் சீர்கேடான நிலையிலிருப்பதால் அது வகைக்குப் புதிய கட்டிடம் ஒன்று கட்டவும் திட்டமிடப்பட்டிருக்கிறது.

### கால் நடை அபிவிருத்தி

நகரில் உள்ள மாடுகள் அபிவிருத்திக்காக நகரசபையார் ஒரு சிந்துப் பொலிகாளையை வாங்கிப் பொது மக்களின் இலவச உபயோகத்திற்காக முனிசிபல் ஆபீஸ் காம்பவுண்டுக்குள் வைத்திருக்கிறார்கள். பசுமாடு வைத்திருப்போர் இலவசமாக இதைப் பயன்படுத்திக்கொள்ளலாம். இந்தத் திட்டம் 6 மாத காலம் வரை அமுலிலிருக்குமென்று கமிஷனர் அறிவிக்கிறார்.

### நகரச் சிவன் கோவில் உற்சவம்

நகரச் சிவன் கோவில் ஆடிப்பூர உற்சவம் நடைபெற்று வருகிறது. இன்று நான்காவது திருவிழா. இன்றுமுதல் சோமாதேவி நாதசுர வித்வான் எம். ஆர். குருசுவாமியின் நாதசுரக் கச்சேரி நடைபெறும். தேவார பாராயணமும், ஹரிஹரய்யர் கோஷ்டியின் திருப்புகழ் பாராயணமும், சைவசமயச் சொற்பொழிவுகளும் நடைபெறும். மேலும் எலக்டிரிக் விமானம், கரகம், பாத நாட்டியம் முதலியனவும் வழக்கம்போல் நடைபெறும்.

### ஸ்பெஷல் கூட்டத்துக்குக் கோரமில்லை

கல்லுக்கட்டி ஊருணிக் கேசு சம்பந்தமாக சர்க்கார் அங்கீகரித்த ஒப்பந்தத்திற்கு மேற்கொண்டு எதுவும் செய்வதற்கில்லை யென்றும், எனவே நகர சபை 20-7-43 அன்று இது சம்பந்தமாக நிறைவேற்றிய தீர்மானத்தைப் புனராலோசனை செய்யவேண்டுமென்றும் குறிப்பிட்டு நேற்று புதன்கிழமை மாலை 4-30 மணிக்கு உள்ளூர் நகர சபையின் விசேஷக் கூட்டமொன்று கூட்டப்பட்டது. ஆனால் 5 மணி வரை சேர்மனுடன் 5 மெம்பர்களே வந்திருந்ததால், கோரமில்லையென்று கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.

### துருப்புகள் சகாய நிதிக்கு நாடகம்

குமார ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்களது ஆதரவிலும் முன்னிலையிலும், காரைக்குடி ஷண்முகவிலாஸ் தியேட்டரில் 7—8—43 சனிக்கிழமை இரவு துருப்புகள் சகாய நிதிக்காக ஸ்ரீ N. S. கிருஷ்ணன், T. A. மதுரம் கோஷ்டியாரால் "சந்திர ஹரி" எனும் ஹாஸ்ய நாடகம், "பட்டை நாமம்" என்ற காமிக்குடன் நடத்தப்படும்.

## காரைக்குடியில் ரேஷனிங்

### ஆகஸ்டில் அமுலுக்கு வருகிறது

காரைக்குடி, தேவகோட்டை ஆகிய இரண்டு நகரங்களிலும் ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வரவிருக்கும் உணவுப் பங்கீடுத் திட்டத்திற்கு முன்னேற்பாடாக ஜனசங்கியைக் கணக்குகள் முனிசிபல் சிப்பந்திகளால் எடுக்கப்பட்டு விட்டன. மேற்படித் திட்டப்படி வயது வந்த நபர் ஒன்றுக்கு ஒரு நாளைக்குப் பட்டணம் படி காலே யரைக்கால் (⅜ படி) வீதமும், குழந்தைகளுக்கு ($\frac{3}{16}$) மூன்று வீசம் படி வீதமும் வாரத்திற்கொரு முறை உணவுத் தானியங்கள் சப்ளை செய்யப்படும். இத்திட்டத்தில் அரிசி, கேப்பை, நெல், கம்பு ஆகிய தானியங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சில்லறை வியாபாரிகட்கு லைசன்ஸுகள் வழங்கப்பட்டு நகரில் பல இடங்களிலும் விற்பனைக்காகப் பல டிப்போக்கள் திறக்கப்படும் என்று தெரிகிறது.

இந்த ஜில்லாவில் சிவகாசி, விருதுநகர் முனிசிபாலிடிகளிலும், ராமேஸ்வரம் தீவிலும் மற்கனவே ரேஷனிங் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டுவிட்டது.

### இலங்கையில் அரிசிப் பங்கீடு

இந்தியாவிலிருந்து இனி இலங்கைக்கு அரிசி ஏற்றுமதி செய்ய முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டதால், ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து இலங்கையில் அரிசிப் பங்கீடின் அளவு பாதியாகக் குறைக்கப்படும். குறைவை கிரப்ப கோதுமை கொடுக்கப்படுமாம்.

### திருச்சியில் சமூகச் சீர்திருத்த நாடகம்

31-7-43 சனிக்கிழமை இரவு 10-30-மணிக்கு, திருச்சி முனிசிபல் பப்ளிக் ஹாலில் மதுரை ஜில்லாபோர்டுத் தலைவர், பட்டிவீரன்பட்டி உயர்திரு. W. P. A. சௌந்திரபாண்டியன் அவர்கள் தலைமையில் காஞ்சிபுரம் திராவிட நடிகக் கழகத்தார் "சந்திரோதயம்" என்ற சமூகச் சீர்திருத்த நாடகத்தை நடிப்பார்கள்.

இந்நாடகத்தில் பகுத்தறிவு இயக்கத் தோழர்களான C. N. அண்ணாத்துரை, M. A., ஈழத்து அடிகள், B. A., T. P. S. பொன்னப்பன் முதலிய பலர் நடிப்பார்கள் என்று அறிவிக்கப்படுகிறது.

### கள்ள நோட்டுக் கருவிகள் வைத்திருந்ததாக

சமீபத்தில் இலங்கையிலிருந்து ராஜகிரி வந்திருக்கும் அப்துல் ஹமீத் என்பவர் கள்ள நோட்டுத் தயாரிக்கும் கருவிகள் வைத்திருந்ததற்காக ராமனுதபுரம் போலீசாரால் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### ஜோதி மன்றம், கல்லல்

ஷை மன்றத்தின் சார்பில் 18-7-43 மாலை 4 மணிக்கு ஓர் இலக்கியக் கூட்டம் நடைபெற்றது. ஆசிரியர் அ. குமாரவேல் பிள்ளை அவர்கள் தலைமைவகித்தார்கள். "பக்தி" "உலகம் பலவிதம்" என்னும் பொருள்கள் குறித்துப் பலர் சொற்பொழிவாற்றினர்.

### 1949 வரை ஜப்பானுடன் போர்

ஜப்பானுடன் நடத்தும் போர் 1949-ம் வருஷம் வரை நீடிக்குமென்று அமெரிக்கக் கடற்படை எதிர்பார்ப்பதாக அமெரிக்கக் கடற்படைப் போர் நடவடிக்கைப் பிரிவின் உபதலைவரான அட்மிரல் பிரடரிக் ஹார்ன் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் தெரிவித்திருக்கிறார்.

### ஜின்னுவுக்குக் கத்திக் குத்து

ஜூலை 26உ பிற்பகல் ஜனாப் ஜின்னாவைப் பார்க்கச் சென்ற ஒரு முஸ்லிம் அவரைக் கத்தியால் தாக்கியதாயும், பின்னர் அவர் போலீஸாரால் கைது செய்யப்பட்டதாயும் பம்பாய்ச் செய்தி கூறுகிறது. ஜனாப் ஜின்னாவுக்கு முகவாய்க்கட்டையிலும், கையிலும் சிறிய காயங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

## மத்திய அஸம்பிளி

### ஆகஸ்டு 6உ ரகசியக் கூட்டம்?

ஜூலை 26உ மத்திய அஸம்பிளிக் கூட்டம் புது டில்லியில் ஆரம்பமாயிற்று. அகோலாவுக் கருகே விபத்துக் குள்ளான மெயில் வண்டியில் முதல் சிகிச்சைக்கான போதிய வைத்திய வசதிகளை வைத்திருக்க சர்க்கார் தவறிவிட்டதுபற்றி விவாதிப்பதற்காக ஸ்ரீ தேஷ்முக் கொண்டுவந்த அவசரப் பிரேரணை ஓட்டெடுக்கப்படாமலே நிராகரிக்கப்பட்டது.

### இந்தியக் கைதிகள்

ஜப்பானியர் வசமுள்ள இந்திய யுத்தக் கைதிகளின் தொகை 1270 என்று கணக்கிடப்பட்டிருக்கிறதென்றும், 68,499 இந்தியர்பற்றித் தகவல் இல்லையென்றும், இவர்களில் பெரும்பாலோர் ஜப்பானியர் வசம் கைதிகளாக இருப்பதாக நம்பப்படுவதாயும், கிடைத்துள்ள சொற்பத் தகவலிலிருந்து இந்தியக் கைதிகளை ஜப்பானியர் மிகக் கொடுமையாக நடத்தி வருவதாகவே தெரிகிறதென்றும் ஸர் பிரோஸ் கான் நூன் தெரிவித்தார்.

### காந்திஜி கடிதம்

காந்திஜி ஜின்னுவுக்கு எழுதிய கடிதத்தின் நகலைச் சட்டசபை முன்பு வைக்க முடியுமா என்று கேட்கப்பட்டதற்கு முடியாதென்று உள்நாட்டு மெம்பர் பதிலளித்தார். மிஸ்டர் பிலிப்ஸ் கடிதத்தையும் வைக்க முடியாதென்று சொல்லப்பட்டது. இவை சம்பந்தமாகக் கொண்டுவரப்பட்ட அவசரப் பிரேரணைகளும் நிராகரிக்கப்பட்டன.

அரசியல் கைதிகளுக்கும், பாதுகாப்புக் கைதிகளுக்கும் அதிக வசதி அளிக்க வேண்டுமென்று கோரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் மத்திய அஸம்பிளியில் ஜூலை 27உ கொண்டுவந்த பிரேரணைக்குப் பாதகமாக 41 வாக்குகளும் சாதகமாக 38 வாக்குகளும் கிடைத்தமையால் அது தோல்வியுற்றது. இதுவரை 4623 பேர் விடுதலை செய்யப்பட்டிருப்பதாக ஹோம் மெம்பர் கூறினர்.

உணவு நிலைபற்றிய விவாதம் ஆகஸ்டு 4உ நடக்கும். 6ந் தேதி ரகசியக் கூட்டமொன்று நடைபெறுமென்றும் அதில் யுத்த நிலைமைபற்றியும் இந்திய ராணுவம் பற்றியும் விவாதிக்கப்படுமென்றும் தெரிகிறது.

### தேவகோட்டை கோட்டையம்மன் கோவில்

இக்கோவிலில் ஆண்டு தோறும் நடைபெற்று வரும் உயிர்ப் பலியை அறவே ஒழிக்க வேண்டுமென்ற நன்னோக்கத்துடன் இந்நகர் ஜீவகாருண்யமுள்ள நகரத்தார்கள் பல ஆண்டுகளாகச் செய்த முயற்சியினுல் சென்ற விக்ரம ஆண்டில் நகரக் கடாப்பலியை நிறுத்திவிட்டார்கள். அதன்படியே சென்ற ஆண்டு வரை நடந்து வந்தது. இவ்வாண்டில் ஆடி 8உ நகரத்தார்களில் பலி விரும்பும் ஒரு சிலர் பிறர் அறியாது நாரக் கூட்டமெனக் கூடி நகரக் கடாப் பலியை இடுவதெனத் தீர்மானித்தார்கள். இதை யறிந்த பலி விரும்பாத நகரத்தார்கள் 10உ பிற்பகல் தண்டற்காரன் மூலமாக நகரக் கூட்டம் சொல்லி யனுப்பி நகரப் பள்ளிக்கூடத்தில் கூடினர்கள். பலி விரும்புவோர்கள் கூட்டத்திற்கு வந்து தங்கள் 8உ முடிவே முடிவென்றும் பலியிடுவதைச் செய்தே தீருவோம் என்றும் பிடிவாதமாகப் பேசியபடி வெளியேறிவிட்டார்கள். பின்னர் திரு. கரு. கி. சொர்ணநாதஞ் செட்டியாரவர்கள் கூட்டத்திலிருந்த மற்ற நகரத்தார்களிடம் இவ்வாண்டு விழாவை எவ்விதக் கலகமுமின்றி நடத்த நீங்கள் விட்டுக்கொடுக்கவேண்டுமென்றும் அடுத்த ஆண்டில் நகரத்தாரனைவரும் ஒற்றுமையாக ஒரு முடிவுக்கு வந்தாலொழிய இந்த விழாவைத் தொடங்குவதில்லையென்றும் உறுதி கூறிய பின்னர் ஜீவகாருண்யமுள்ள நகரத்தார்கள் அவரிஷ்டப்படிக்கு விட்டு விட்டார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூலை 27உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் மொத்தம் | 51 | 8 | 0 |
| ,, சில்லறை | 51 | 12 | 0 |
| தங்கம் மூசை | 70 | 0 | 0 |
| வெள்ளி 100 தோலா | 103 | 0 | 0 |
| ஷை தோலா 1க்கு | 1 | 0 | 9 |



## திருப்பத்தூரில் பாரதிதாசன்

### தமிழ்க் கழக ஆண்டு விழாவில் தலைமை

திருப்பத்தூர் தமிழ்க் கழகத்தின் 5-வது ஆண்டு நிறைவு விழா சென்ற ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் 5-30 மணிக்கு, விழாவுக்கென்று அமைக்கப்பட்டிருந்த பெரிய கொட்டகையில் சிறப்பாக நடைபெற்றது. புதுவைக் கவி பாரதிதாசன் தலைமை வகித்தார். கழகக் காரியதரிசி திரு. சு. மகாலிங்கம் எல்லோரையும் வரவேற்றுப் பேசினர். தமிழ்க் கழகத்தின் சார்பாகவும் திருப்பத்தூர் பொதுஜன ஊழியர் சங்கம் வேந்தன்பட்டி இளைஞர் ஒற்றுமைச் சழகம் இவற்றின் சார்பாகவும் தலைவருக்கு வரவேற்புப் பத்திரங்கள் படித்துக் கொடுக்கப்பட்டன. நாஸ்திகர் சங்கம், ஆதிதிராவிடர் தொழிலாளர் சங்கம், தென்மாப்பட்டு சமதர்மச் செந்தமிழ்க் கலாசாலை இவற்றின் சார்பில் தலைவருக்கு மலர் மாலைகள் அணியப்பெற்றன.

ஆசிரியர் திரு. சி. முருகையா கழகத்தின் அறிக்கையைப் படித்தார். பின்னர் திரு. வை. சு. ஷண்முகம் செட்டியார் பகுத்தறிவு நூல் நிலயத்தைத் திறந்து வைத்து அது மென்மேலும் வளர்ந்து மக்களுக்கு நற்பயன் அளிக்கவேண்டுமென்று வாழ்த்தினர். கோனபட்டு ஹைஸ்கூல் ஆசிரியர் திரு. கெ. அப்பாத்துரைப் பிள்ளை M. A., L. T., "கல்வியும் வாழ்வும்" என்ற பொருள் பற்றி ஓர் விரிவுரை நிகழ்த்தினர். தற்காலக் கல்வியும் கல்வி முறையும் எப்படி மக்கள் வாழ்க்கைக்கு ஒவ்வாதனவாயிருக்கின்றன என்பது பற்றியும் விளக்கினர். தற்போதைய கல்வி முறையில் அன்பில்லையென்றும், மக்களிடையே வேற்றுமையையும், மூடத் தனத்தையும் வளர்க்கும் கல்வி தீமையே பயப்பதென்றும், எல்லோரிடத்தும் ஒரே வித அன்பு செலுத்தும் வகையில் மக்களைப் பண்படுத்தும் கல்வியே பயன் தரத் தக்கதென்றும், அதுவே மக்கள் வாழ்வைச் செம்மைப்படுத்துவதென்றும் அவர் கூறினர்.

தேவகோட்டை திரு. எல். வைரவன் பேசும்போது, நாட்டில் மூடக்கொள்கைகளும், தீமை தரும் நம்பிக்கைகளும் மக்களிடையே ஒரு சாராரால் எவ்வாறு சுயநலங் கருதிப் பிரசாரம் செய்யப்பட்டு வருகின்றதென்பதை யெடுத்துக் கண்டித்து மக்கள் ஏமாந்துவிடக்கூடாதென்று எச்சரித்தார். திருமதி வை. சு. மஞ்சுளாபாய் பேசும்போது, கூட்டத்தில் பெண்களை அழைத்து வராதது கண்டு தாம் விசனிப்பதாகச் சொன்னர். இம்மாதிரிக் கூட்டங்களுக்குப் பெண்களும் அழைத்து வரப்பட்டால்தான் குடும்ப வாழ்க்கை மன வேற்றுமையின்றி நடைபெற முடியுமென்றும், எதிர்கால மக்கள் பகுத்தறிவு உணர்ச்சி பெற்றுத் திகழ முடியுமென்றும் குறிப்பிட்டார்.

ஆசிரியர் திரு. சி. முருகையா "பாவலர் மாண்பு" என்ற பொருள் பற்றிப் பேசும்போது, பாரதிதாசன் அவர்கள் தம் பாவின் திறத்தால் தமிழ்மக்களுக்குப் பகுத்தறிவுச்சுடர் கொளுத்தி வருகிறாரென்றும், அவரது கவிகள் உயிர்க் கவிகள் என்றும் கூறி மேற்கோளாக அவரது கவிதைகளிலிருந்து சிலவற்றை எடுத்து விளக்கினர்.

தலைவர் தமது முடிவுரையில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

தமிழ்நாட்டில் எழுதப்படும் கவிகள் எல்லாம் பக்திரசத்துடன்தான் எழுதப்படுகின்றன. வெறும் ஏடு இலக்கியமல்ல, அது உண்டாக்கும் உணர்ச்சி, கருத்துதான் உண்மையில் இலக்கியம். இன்றைக்கு மக்களுக்கு வேண்டிய எண்ணங்கள் மக்கள் மனத்தில் எழும்படியான பாட்டுக்களை இயற்றவேண்டும். எது கவி? பாவம், மொழி, இசை இம்மூன்றும் ஒரே சமயத்தில் எழும்பவேண்டும். தியாகராஜர் கீர்த்தனத்தில் இம்மூன்றும் ஒரே சமயத்தில் உண்டாகவில்லை யென்பது பாரதியார் கருத்து. மூடத்தனத்தை இசை மூலம் பரப்பி என்ன பிரயோஜனம்? பாட்டு என்றால் அது பக்திப் பாட்டுதான் என்ற எண்ணம் ஒழியவேண்டும். மக்களின் வாழ்க்கைக்கு வேண்டிய கருத்துக்களைக் கொண்டு பாக்கள் இயற்றப்படவேண்டும்.

திரு. சி. முருகையா நன்றிகூற இரவு சுமார் 11 மணிக்கு விழா இனிது முடிந்தது.

### தென்மாப்பட்டில் வரவேற்பு

மறுநாள் திங்கட்கிழமை பகல் 11 மணிக்கு கவி பாரதிதாசன் தென்மாப்பட்டு சமதர்மச் செந்தமிழ்க் கலாசாலைக்கு விஜயம் செய்தார். ஷை கலாசாலையின் பகுத்தறிவு மாணவ மன்றத்தார் அவருக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தனர். அவரது கவிதையிலடங்கிய பல பாடல்களை மாணவ மாணவியர் பாடினர். "இத்தகைய கலாசாலை மாணவர்களைப் போன்ற மாணவர்களைப் பெரிய கலாசாலை, பல்கலைக் கழகங்கள்கூடத் தயாரிக்க முடியாது. அங்கு படித்துப் பட்டம் பெற்று வெளிவரும் வித்வான்கள் எல்லாம் பெரும்பாலும் நமது முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போடுபவர்களாகவே இருக்கிறார்கள். அங்கு பாடமாக வைக்கப்பட்டிருக்கும் நூல்களில் ஒன்றுவது ஒரு உயர்ந்த மனிதனை உண்டு பண்ணத்தக்கதாக இருக்கவில்லை. மாணவர்களை எதெதற்கெல்லாம் பயப்படுத்தக்கூடாது. கல்வி முறை சரியில்லை; அது மாற்றியமைக்கப்படவேண்டும். தமிழர்கண்ட அறம் எது? சமூகத்திற்கு நல்லது செய்யும் செயல் எதுவும் அறம். அறத்தால் வருவதே இன்பம் என்றார் வள்ளுவர். பிறருக்கு நமது உழைப்பைக் கொடுக்கக் கொடுக்க நமக்குக் கிடைக்கும் இன்பமே அறம் என்பது சாக்ரடீஸ் கருத்து. இன்பத்தைப் பெறும் ஆற்றல்தான் அறம் என்று அவர் சொன்னர். இத்தகைய உயர்ந்த கொள்கையை வாழ்வில் கடைப்பிடிக்கும்படி தூண்டும் கல்வியே சரியான, தேவையான கல்வி. அதற்கேற்றபடி கல்வி முறை திருத்தியமைக்கப்படவேண்டும்" என்று பாரதிதாசன் கூறினர்.

இத்துடன் வைபவம் முற்றுப்பெற்றது.



### "ஓரியண்ட"லின் அபிவிருத்தி

"ஓரியண்டல்" இன்ஷூரன்ஸ் கம்பெனியின் 1942-ம் வருஷத்திய ஆடிட்டான லாப நஷ்டக் கணக்கும் பாலன்ஸ் ஷீட்டும் கிடைக்கப்பெற்றோம்.

பிரஸ்தாப வருஷத்தில் கிடைத்த மொத்தம் பாலிஸிகள் 86,718; மொத்தம் பிஸினஸ் ரூ 9,51,27,864; இதற்கு முந்திய வருஷத்தில் மொத்தம் பிஸினஸ்: 8,16,19,725. அதிகப்படியாக ஒரே பாலிஸியில் கிடைத்த பிஸினஸ் ரூ 1,02,000.

மொத்த பிரீமிய வருமானம்:— ரூ 3,80,99,736—5—6: சென்ற வருடத்தைவிட 3 லக்ஷம் குறைவு; இதற்கு பர்மா, மலேயா பிஸினஸ்களின் பிரீமியம் குறைந்து போனதுதான் காரணம்.

மொத்தம் கொடுபட்ட கிளெய்ம் தொகை: ரூ 1,76,76,307—8—3.

கமிஷன் உள்பட செலவு விகிதம் மொத்த பிரீமிய வருமானத்தில் 21·2%.

யுத்தப்பரிக பண்டு, பீபிள்ஸ் [illegible] யர் பிரிகேட், வங்காள புயல் நிவாரண நிதி இவைகள் உள்பட மொத்தம் நன்கொடை வழங்கியது ரூ 16,000.

இன்கம்டாக்ஸ் அன்னியில் ஷேர் 1-க்கு ரூ 125 விகிதம் டிவிடெண்டு கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றனர்.

எப்போதும் போல் சிப்பந்திகளுக்கு ஒரு மாதச் சம்பளம் போனஸ் கொடுக்கவும் முடிவு செய்திருக்கின்றனர்.

'ஓரியண்ட'லின் அபிவிருத்தி சிறந்ததாகவே இருந்துவருகிறது.

### பிரிட்டனுக்கு இந்தியப் பத்திரிகாசிரியர்கள்

இந்தியப் பத்திரிகையாளர்கள் பிரிட்டனுக்கு அழைக்கப்படவேண்டுமென்று சமீபத்தில் மிஸ்டர் ஜோன்ஸன் கூறிய யோசனை சம்பந்தமாக இந்திய சர்க்காரைக் கலந்து ஆலோசித்து வருவதாக மிஸ்டர் அமெரி காமன்ஸ் சபையில் தெரிவித்திருக்கிறார்.

## எஞ்சினீயரிங் காலேஜில் பாஷாவாரிப் பிரதிநிதித்வம்

கிண்டி எஞ்சினீயரிங் காலேஜில் சேரும் மாணவர்களுக்கு பாஷாவாரிப் பிரதேசப் பிரதிநிதித்வ முறை இருக்கவேண்டுமென்று சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர். தமிழ் ஜில்லா மாணவர்கட்கு 50·8 சதவிகித ஸ்தானங்களும், தெலுங்கு ஜில்லா மாணவர்கட்கு 38·1 சதவிகித ஸ்தானங்களும், தென்கன்னடம், மலையாள ஜில்லா மாணவர்கட்கு 11·1 சதவிகித ஸ்தானங்களும் அளிக்கப்படும்.

## "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" வழக்கு

"ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி மீதும், பிரசுரகர்த்தர் மீதும் சர்க்கார் தொடர்ந்திருந்த கோர்ட் அவமதிப்பு வழக்கில் அலகாபாத் ஹைகோர்ட் அவர்கட்குத் தண்டனை விதித்ததும், பிரிவிகவுன்சிலுக்கு அப்பீல் செய்ததில் தண்டனை ரத்து செய்யப்பட்டதும் வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். "ஹிந்துஸ்தான் டைம்ஸின் தலையங்கத்தை அவதூறு என்று கூறமுடியாது; நீதி இலாகா உத்யோகஸ்தர்கள் யுத்த வசூலுக்கு உதவி செய்யவேண்டுமென்று பிரதம நீதிபதி எழுதியிருப்பதாகச் சொல்லும் செய்தி உண்மையானால் அது ஹைகோர்ட்டின் கவுரவத்தைக் குறைத்துவிடுமென்று சொல்வது அவதூறல்ல. அந்தச் செய்தி வாஸ்தவமல்ல வென்று மறுப்புக் கூறியிருந்தாலே போதுமானது. இல்லாவிட்டால் மான நஷ்ட வழக்கு தொடர்ந்திருக்கலாம். பொதுவாக இத்தகைய விஷயங்களில் நீதிபதிகள் அளவுக்கு மீறி ரோஷம் கொள்ள வேண்டியதில்லை" யென்று பிரிவி கவுன்சில் தீர்ப்பில் தெரிவித்திருக்கிறது.

# முஸோலினி ராஜிநாமா

## படாக்ளியோ புதிய பிரதம மந்திரி

இத்தாலிய மன்னர் விக்டர் எமானுவல் வெளியிட்டுள்ள பிரகடனத்தில், பெனிட்டோ முஸோலினி தாம் வகித்து வந்த இத்தாலிய சர்க்கார் தலைமைப் பதவியையும் பிரதம மந்திரி—அயல் நாட்டு மந்திரி பதவிகளையும் ராஜிநாமாச் செய்திருப்பதைத் தாம் ஏற்றுக் கொண்டிருப்பதாகத் தெரிவித்திருப்பதுடன், மேற்படிப் பதவிகளுக்கு மார்ஷல் பீட்ரோ படாக்ளியோவை நியமித்திருப்பதாயும் குறிப்பிட்டிருக்கிறார். மன்னரே இத்தாலியப் படைகளின் சேனாதிபதி பதவியை ஏற்றுக்கொண்டிருக்கிறார்.

முஸோலினி சுமார் 20 வருஷ காலம் சர்வாதிகார ஆட்சி நடத்தி வந்திருக்கிறார். அவரது ராஜிநாமா மூலம் இத்தாலியப் பாஸிஸ்டுக் கட்சிக்கிருந்து வந்த பிடிப்பு போய்விட்டதென்று விமர்சகர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். ரோம் ரேடியோ வழக்கம்போல பாஸிஸ்ட் பாடலைப் பாடாமல் இத்தாலிய தேசிய வாழ்த்துப் பாடலைப் பாடியதாம். பாஸிஸ்ட் சகாப்த ஆண்டும் தெரிவிக்கப்படவில்லை. முஸோலினி சிறிது காலமாகத் தேக அசௌக்கிய முற்றிருந்து வந்ததாயும், சர்க்காரில் ஏற்பட்ட மாறுதலுக்கு அவரது தேக அசௌக்கியமே காரணமென்றும் ஒரு செய்தி கூறுகிறது. அவருக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதாக வாஷிங்டனிலுள்ள அயல்நாட்டு ராஜீய அதிகாரி யொருவர் கூறியிருக்கிறார்.

### முஸோலினி கைது

முஸோலினியும், பாஸிஸ்டுக் கட்சிக் காரியதரிசியும், மற்ற மந்திரிகள் அனைவரும் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருப்பதாக பெர்ன் நிருபர் தெரிவித்திருக்கிறார். பாஸிஸம் ஒழிந்துவிட்டதென்று இத்தாலியின் பல பாகங்களிலும் மக்கள் கொண்டாடினராம். முஸோலினி ஜர்மனிக்குத் தப்பியோட முயன்றபோதுதான் கைது செய்யப்பட்டாராம்.

இத்தாலி இன்னும் சில வாரங்களில் போரிலிருந்து விலகிவிடுமென்று ஸ்டாக்ஹோம் நிருபர் கருதுகிறார்.

இத்தாலி முழுமைக்கும் ராணுவ ஆட்சி முறை அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. மாலை முதல் காலை வரை எங்கும் இரவு நடமாட்டத் தடை உத்தரவும் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

### நேச தேச நிபந்தனைகள்

நேச தேசத்தினர், இத்தாலிக்கு விடுத்திருக்கும் சமாதான நிபந்தனைகள் இரண்டுதான். பாஸிஸ்ட் ஆட்சியும் அதனை ஆதரிக்கும் ராணுவமும் நிபந்தனையின்றிச் சரண் புகவேண்டும். பாஸிஸ்ட் ஆட்சியில்லாத வேறெந்த சர்க்காரையும் இத்தாலிய மக்கள் ஏற்படுத்தி சுயேச்சை பெற்ற தேசங்களுள் ஒன்றாக ஆகலாம் என்பவைதான் அந்நிபந்தனைகள்.

### புதிய சர்க்கார்

இத்தாலி மந்திரி சபை புதிதாக அமைக்கப்பட்டுவிட்டது. ரோம் நகரிலிருந்த ராணுவம் அப்புறப்படுத்தப்பட்டுவிட்டது. புதிய சர்க்கார் ரோமைவிட்டு வெளியேறி குவீரினல் என்ற நகரைத் தலைநகராக்கியிருக்கின்றனர்.

இத்தாலி உடனே சமரசப் பேச்சுக்களை ஆரம்பிக்கவேண்டுமென்று இத்தாலியிலுள்ள மாணவர்கள் வற்புறுத்தி வருகின்றனராம். யுகோஸ்லோவிலும், கிரீஸிலுமிருக்கும் 22 இத்தாலிய டிவிஷன்களைத் திருப்பி அழைக்க படோக்ளியோ உத்தரவிட்டிருப்பதாகவும், முஸோலினியின் அனுதாபிகள் என்று கருதப்படும் ராணுவ அதிகாரிகள் எல்லாம் கைது செய்யப்படுவதாயும் செய்திகள் வெளியாகியிருக்கின்றன.

### சர்ச்சில் பேச்சு

ஜூலை 27உ காமன்ஸ் சபையில் முஸோலினி வீழ்ச்சி பற்றி மிஸ்டர் சர்ச்சில் பேசும்போது, இதுவரையில் புதிய இத்தாலிய சர்க்கார் நேசநாடுகளுடன் எவ்வித சம்பந்தமும் ஏற்படுத்திக் கொள்ள முன்வரவில்லை யென்றும், எவ்வித யோசனையும் வரவில்லை யென்றும், இத்தாலி நிபந்தனையின்றிச் சரணாகதி அடையவேண்டுமென்றும், ஜர்மனி மீது யுத்தம் நடத்த இத்தாலியில் அவசியமான வசதிகளை யெல்லாம் இத்தாலிய சர்க்கார் கொடுக்கவேண்டுமென்றும், அதுவரையில் இத்தாலி மீது யுத்தத்தைத் தீவிரமாக நடத்தியே ஆகவேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

### ஜர்மனியின் படை பலம்

ஜர்மனியின் படை பலத்தைப் பற்றிப் பேசும்போது, ஹிட்லரிடம் ஜர்மன் சிப்பாய்கள் மட்டும் 3 கோடிப் பேர் இருப்பதாயும், இவர் தவிர இதரக் கூட்டாளி நாடுகளின் சேனைகளும் உண்டென்றும், ஜர்மனிக்கு ரஷ்யாவில் பெருநஷ்டம் ஏற்பட்ட போதிலும், அதன் பலம் இன்னும் பிரமாண்டமானதாகவே இருக்கிறதென்றும் கூறினார்.

இத்தாலி ஜர்மனிக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி நடக்குமென்று நம்புவதாக ஜர்மன் பத்திரிகைகள் எழுதியிருக்கின்றனவாம். முஸோலினி ராஜிநாமாச் செய்த காரணத்தை முன்னிட்டு இத்தாலியின் வெளிநாட்டுக் கொள்கையில் யாதொரு மாறுதலும் ஏற்படப் போவதில்லையென்று இத்தாலி ஜப்பானுக்கு வாக்குறுதியளித்திருக்கிறதாம்.

### போப்பின் முயற்சி

நேச தேசத்தினருடன் தனியாகச் சமாதானம் செய்து கொள்ளும்படி புதிய இத்தாலிய சர்க்காரைத் தூண்ட போப் முயன்று வருகிறாராம்.



# மலேயா சேவிங்ஸ் பாங்கிக் கணக்கு

## கணவன் கணக்கில் மனைவி பணம் வாங்கலாம்

மலேயா தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்கில் பணம் போட்டு வைத்துள்ள ஒருவர் மனைவிக்கு, அவர் கணக்கில் இருப்பிலிருக்கும் தொகையில் 60% ஐ, இந்தியாவில் சேவிங்ஸ் பாங்க் வேலை நடத்திவரும் எந்தத் தபாலாபீசும் கொடுக்கலாம். ஆனால் கொடுக்கும் தொகை 1000 வெள்ளிக்கு (அதாவது 1550 ரூ.க்கு) மேலே போகக்கூடாது. கணக்கு புருஷனின் சொந்தப் பெயரில் உள்ளதாயிருக்கவேண்டும். மனைவியின் அடையாளத்தைப்பற்றிச் சரியான ருஜு கொடுக்கவேண்டும். அத்துடன் போட்டிருக்கும் தொகையிலிருந்து பணம் வாங்குவதற்குக் கணவன் கொடுத்த அனுமதியையும் பாஸ் புத்தகத்தையும் மனைவி வைத்திருக்கவேண்டும் என இந்திய தபால் தந்தி இலாகா அறிக்கை கூறுகிறது.

## மீனாட்சி சங்கம், இலக்குமிபுரம்

நிகழும் ஆடிமீ 7உ (23-7-43) மாலை 4 மணிக்கு மீனாட்சி சங்கத்தின் சிறப்புக் கூட்டம் திருப்பத்தூர் ரேஞ்சு டெபுடி இன்ஸ்பெக்டர் திரு R. ராமசாமி ஐயர் அவர்கள் B. A., L. T. தலைமையில் நடைபெற்றது. சொக்கலிங்க வித்தியாசாலை மாணவ மாணவிகள் பாட்டு, பேச்சு, நடிப்பு, கும்மி, கோலாட்டம் நிகழ்த்திக் காட்டினர். இடையிடையே தேவாரம் பாடப்பெற்றது.

தலைவர் முடிவுரையில் பிள்ளைகள் நடிப்புத் திறமையை வியந்தும், பெண்கள் காகக் கும்மியைப் பாராட்டியும் பேசினார்கள். வித்தியாசாலை அதிபர் திரு. ந. சொ. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் நன்றிகூறக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.



# சென்னை மாகாணத்தில் உணவுப் பங்கீடு

## அமுல் முறை பற்றிய விதிகள்

சென்னை சர்க்கார் உணவுப் பங்கீடு முறை பற்றிய உத்தரவொன்றை வெளியிட்டிருக்கிறார்கள். உத்தரவில் கண்டுள்ள முக்கிய விஷயங்கள் வருமாறு:—

சென்னை ஸிவில் சப்ளைக் கமிஷனர் ஒரு குறிப்பிட்ட ஸ்தலத்திலுள்ள மொத்த வியாபாரியையோ சில்லறை வியாபாரியையோ பங்கீடு செய்யப்படும் சாமான்களை சப்ளை செய்யும்படி அதிகாரமளிக்கலாம். வேறு யாரும் சப்ளை செய்யக்கூடாது. வீட்டு உபயோகத்திற்காகப் பண்டங்கள் வாங்குவோர் அவற்றை விலைக்கோ, இனாமாகவோ, அல்லது வேறு சாமான்களுக்குப் பதிலாகவோ, சொந்தக்காரர்களுக்கோ, விருந்தினர்களுக்கோ அல்லது வேறு யாருக்கும் கொடுக்கக்கூடாது.

பங்கீடுக் கார்டுகள் பெறாமலும், அந்தக் கார்டுகளில் குறிப்பிட்ட அளவுக்கு மேலாகவும் யாரும் பங்கீடுப் பொருள்களை வாங்கக் கூடாது. பங்கீடுக் கார்டு பெறுவோர்தாமோ அல்லது அவர் சார்பாக அவர் வீட்டிலுள்ளவரோ கையெழுத்திடலாம். ஸிவில் சப்ளைக் கமிஷனர் அல்லது அவரது அதிகாரம் பெற்றவர் சரியான விசாரணைக்குப் பிறகு கார்டுகளில் குறிப்பிட்ட அளவைத் திருத்தவோ, முழுவதும் ரத்து செய்யவோ, மாற்றவோ செய்யலாம். அதிகாரம் பெற்ற அதிகாரி, வீட்டுக்காரரின் மதாசாரங்களுக்கு விரோதமன்னியில் ஒரு வீட்டுக்குள் நுழைந்து அங்கு அவசியமான கேள்விகளைக் கேட்டுத் தகவல்களைத் தெரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு நபரும் அவரை வீட்டுக்குள் அனுமதித்து, அவரது கேள்விகளுக்கு சரியான பதிலளிக்க வேண்டும். ஒருவருக்குக் கொடுக்கப்படும் கார்டை மற்றொருவருக்கு மாற்றக் கூடாது.

பங்கீடு முறை தவிர வேறு வகையிலும் ஸிவில் சப்ளைக் கமிஷனர் பங்கீடு கார்டுகள் இல்லாமல் சிலருக்கு சாமான் சப்ளை செய்யலாம். ஒரு குறிப்பிட்ட நபரையோ அல்லது வகுப்பினரையோ இந்தப் பங்கீடு முறையிலிருந்து விலக்கவும், அவ்வாறு விலக்கப்பட்டதை மாற்றவும் மாகாண சர்க்காருக்கு அதிகாரமுண்டு.

## அரிசி ஏற்றுமதி கூடாது

இந்தியாவில் அரிசி நிலைமை மிக நெருக்கடியிலிருப்பதால், இந்தியாவிலிருந்து வெளியே அரிசியை ஏற்றுமதி செய்யக் கூடாதென்று இந்திய சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

## ரிசர்வ் பாங்கிக்குக் கிடைத்த லாபம்

1943 ஜூன் மாதத்தோடு முடிவான வருஷத்தில் இந்திய ரிசர்வ் பாங்கிக்கு 7½ கோடி ரூபாய்க்கு மேல் நிகர லாபம் கிடைத்திருக்கிறது. இத்தொகையில் 20 லட்ச ரூபாய் பங்குதாரர்களுக்கு 4 சத டிவிடண்டாகப் பங்கிட்டுக் கொடுக்கப்படும். மீதியுள்ள ரூ. 7,49,80,740 ம் ரிசர்வ் பாங்கு அவசரச் சட்டப்படி மத்திய சர்க்காருக்குக் கொடுக்கப்படுமாம்.

## மோட்டார் டயர் எண்

மோட்டார் கார் டயர்களிலுள்ள நம்பர்களைத் தொகுத்து வைக்கவேண்டுமென்று சென்னை சர்க்கார் விரும்புவதால் ஆகஸ்டு 7-ந் தேதிக்குள் கார் சொந்தக்காரர்கள் தங்கள் டயர்களின் நம்பர்களை பிரதேச ரேஷனிங் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று ஏற்கனவே பாதுகாப்புச் சட்டப்படி உத்தரவிட்டிருப்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறார்கள். 1943 ஆகஸ்டு மாதத்திற்கு உபரிப் பெட்ரோல் கூப்பனுக்காக மனுச் செய்வோர் தங்கள் மனுவுடன் டயர் நம்பரைக் குறித்தனுப்பலாம். பெட்ரோல் அப்ளிகேஷன் பாரத்திலே கூட டயர் நம்பரைக் குறித்தனுப்பலாம் எனச் சென்னை சர்க்கார் அறிக்கையொன்று கூறுகிறது.

## நூல் கட்டுப்பாடு அதிகாரி

ஜனாப் எம். ஆர். காஸ்மி மத்திய சர்க்கார் கைத்தொழில் இலாகாவில் நூல் கட்டுப்பாட்டு அதிகாரியாக நியமிக்கப்பெற்றிருக்கிறார்.



# வாஷிங்டன் உணவுப் பொருள் மகாநாடு

## இந்தியாவுக்குக் கிடைத்த பலன்

வாஷிங்டனைச் சேர்ந்த ஹாட் ஸ்பிரிங்ஸ் என்ற இடத்தில் நடந்த உணவுப் பொருள் மகாநாட்டால் இந்தியாவுக்குக் கிடைக்கும் லாபம் இன்னதென்பதை அம் மகாநாட்டுக்கு இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்றிருந்தவரே காட்டும் டாக்டர் அக்ராவிடும் புதுடில்லியில் பத்திரிகை நிருபர்களுக்குத் தெரிவித்திருக்கின்றனர். செழிப்பான விதைகளையும் எருக்களையும் இயந்திர சாதனங்களையும் விவசாய நாடுகளுக்கு உதவவேண்டிய அவசியம் இம் மகாநாட்டில் வற்புறுத்தப்பட்டது. இந்தியாவுக்கு இயந்திரம் முதலியவற்றை சப்ளை செய்யவேண்டிய அவசியமும் வற்புறுத்தப்பட்டது. அமெரிக்கா முதலிய நாடுகளிலிருந்து நிபுணர்களை இந்தியாவுக்கு வரவழைப்பதென்றும், இந்தியாவிலிருந்து மேனுடுகளுக்கு மாணவர்களை அனுப்பி அங்குள்ள முறைகளைக் கற்கும்படி செய்யவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

இந்தியாவிலிருந்து உணவுப் பொருள்களை அனுப்ப எவ்வித ஒப்பந்தமும் செய்யப்படவில்லை. ஆராய்ச்சி முறையில் இந்தியா மற்ற நாடுகளுக்குச் சற்று பின் வாங்கி நிற்கிறது. அமெரிக்காவில் விவசாய ஆராய்ச்சிக்காக வருஷத்தில் 3 கோடி டாலர் செலவிடும்போது இந்தியா செலவிடுவது 5 லட்சம் டாலர் தான். ஆனால் உணவுப்பொருள் சத்து ஆராய்ச்சித் துறையில் இந்தியா சற்று முற்போக்கான நிலையிலிருக்கிறதாம்.

## சமஷ்டிக் கோர்ட்டின் அதிகாரம்

பிரிவி கவுன்சிலுக்கு அனுப்பப்படும் வழக்குகளையும் சமஷ்டிக் கோர்ட் விசாரணை செய்யத் தக்கவாறு அதன் அதிகாரத்தை விஸ்தரிப்பது பற்றி இந்திய சர்க்கார் தீவிரமாக ஆலோசித்து வருகின்றனராம்.

## காங்கிரஸ் சொத்துக்களுக்குக் கார்ப்பரேஷன் வரி

சட்ட விரோத ஸ்தாபனமென்று சர்க்காரால் கைப்பற்றப்பட்ட சென்னை ராயப்பேட்டையிலுள்ள தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக்குச் சொந்தமான நிலத்திற்கும் கட்டிடத்திற்கும் உரிய சென்னைக் கார்ப்பரேஷன் வரியான 571 ரூபாயையும் செலுத்திவிட சர்க்கார் அனுமதித்திருக்கின்றனர்.

## சிங்கப்பூர் கப்பல் தளம்

உலகிலேயே பெரிய, மிதக்கும் கப்பல் தளமான 5-ம் ஜார்ஜ் கப்பல் தளத்தைப் பிரிட்டிஷார் சிங்கப்பூரைக் காலி செய்த போது மூழ்கடித்தார்கள். இப்போது ஜப்பானியர் அதை மீண்டும் வெளியே எடுத்து மிதக்க விட்டு விட்டதாக ஜப்பானியச் செய்தி அறிவித்திருக்கிறது.

## ஜில்லாக் கலெக்டருக்கு ரஜா

இராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டர் கான்பகதூர் அலமதுல்லாவுக்கு, பென்ஷன் பெறுமுன்னதாக, ஆகஸ்டு 16உ முதல் நவம்பர் 10உ வரை ரஜா கொடுக்கப்பட்டிருக்கிறது. கடப்பையிலிருந்து ராவ் சாஹிப் K. P. கிருஷ்ணன் நாயர் இராமநாதபுரம் ஜில்லா கலெக்டராக மாற்றப்பட்டிருக்கிறார்.

## கொள்ளைக் குற்றத்திற்கு 7 வருடம்

16—1—43 இரவில் மதுரையிலிருந்து திருப்பத்தூருக்குச் சமீபம் வந்துகொண்டிருந்த ராமவிலாஸ் மோட்டார் காரை வழி மறித்து மோட்டார் சாமான்களைக் கொள்ளையடித்ததாக மதுரை ஜில்லா கச்சிரும்பட்டி கருப்பையாத் தேவன் மீது தொடரப்பட்ட வழக்கில் செஷன்ஸ் ஜட்ஜ் நீதிபதி ராமநாத ராவ் அவர்கள் ஜூரிகளின் ஏகோபித்த அபிப்பிராயத்தின் பேரில் எதிரியைக் குற்றவாளியென்று தீர்மானித்து அவனுக்கு 7 வருடக் கடுங்காவல் தண்டனை விதித்திருக்கிறார்.

## தொழிற் பயிற்சியாளர்க்கு உணவுப் பொருள்

### குறைந்த விலையில் விற்க சர்க்கார் ஏற்பாடு

தொழிற் பயிற்சித் திட்டத்தின் கீழ் நடக்கும் பயிற்சி ஸ்தலங்களுக்குச் சாசமான விலையில் உணவுப்பொருள்கள் விற்கும் ஒரு ஏற்பாட்டை மத்திய கவர்ன்மெண்டார் ஆரம்பித்திருக்கின்றனர். இதன் பிரகாரம் பயிற்சியாளர்களுக்குக் கோதுமை, அரிசி, பயறு, கம்பு, சோளம் ஆகியவைகள் முறையே மணங்கு ஒன்றுக்கு ரூ 8/-, ரூ 12/-, ரூ 7/- ரூ 7/-, ரூ 6/12/- வீதமோ, கடைசியாக நிர்ணயிக்கப்பட்டிருந்த கட்டுப்பாட்டு விலைப்படியோ (இந்த இரண்டில் எது அதிகமாக இருக்கிறதோ அந்தக் கிரயத்துக்கு) விற்கப்படும். உணவுப்பொருள்களை அதிக விலைக்கு வாங்கிப் பயிற்சியாளர்களுக்கு இப்படிக் குறைந்த விலைக்கு விற்பதால் ஏற்படக்கூடிய கஷ்டத்தை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ள ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

வாரம் ஒன்றுக்கு 5 சேர் கோதுமை மாவுடன், 5 சேர் அரிசி என்று பங்கீடு செய்து கொடுக்கப்படும். வேண்டுமானால் மொத்தம் 5 சேருக்கு மேல் போகாமல் கோதுமை மாவும் அரிசியும் தேவையான அளவில் பெற்றுக்கொள்ளலாம். கோதுமை மாவு, அரிசி இவற்றின் விலைகள் அளவுக்கு மிஞ்சி உயர்ந்துவிடும் பட்சத்தில் இந்த இரண்டின் அளவையும் குறைத்து இவற்றிற்குப் பதிலாகக் கம்பும் சோளமும் கொடுக்கலாம் என்று பயிற்சி ஸ்தலங்களின் தலைமை அதிகாரிகளுக்கு யோசனை கூறப்படுகிறது. தற்பொழுது இருந்துவரும் கஷ்டமான உணவு நிலைமையை சமாளிப்பதற்காகவே இந்தத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இந்திய சமஸ்தானங்களிலும், பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், ஸிந்து ஆகியவை தவிர மற்ற மாகாணங்களிலும் உள்ள பயிற்சி ஸ்தலங்கள் எல்லாவற்றிற்கும் இது பிரயோகமாகும்.



## மனை மாட்சி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

"பொய்யை மெய்யாகக் காட்டி யொழுகும் பரத்தையோடு வாழ்ந்த காரணத்தால் முன்னோர் தேடிவைத்த பொருளையெல்லாம் தொலைத்து, வறுமையடைந்தேன். அது எனக்கு மிக்க நாணத்தைத் தருகின்றது" என்று சொன்னான். இதுகாறும் தன்னைவிட்டுப் பரத்தை வீட்டில் வாழ்ந்ததற்காகக் கண்ணகி அவன்மீது கோபங் கொண்டாளா? "தன்னை இகழ்ந்து சென்ற அவன் திரும்பித் தன்னிடம் பரிதாப நிலையில் வருவது கண்டு ஏளனம் செய்தாளா? வெறுப்புற்றாளா? முகத்தையாவது சிறிது சுளித்தாளா? இல்லை. புன்முறுவல் பூத்த முகத்துடன், "இதோ என் சிலம்பு இருக்கிறது அதைக் கைக்கொண்டருள்க" என்று கூறினாள். தற்காலத்தில் நகைக்காகக், கணவனும் மனைவியும் சண்டையிட்டு, வாழ்விழந்து போவதைக் கூடச் சில சமயம் காணநேர்கிறது.

தன் கால் சிலம்பைக் கழற்றிக் கோவலனிடம், கனிந்த முகத்துடன் கொடுத்த கண்ணகி, அதை விற்பதற்காக அவனோடு மதுரைக்கும் மண்மகளறியா வண்ணச்சீரடி நோக நடந்து சென்றாள். அங்கே அவனைப் பறிகொடுத்தாள். நீதிதவறிய மன்னனைக் கடிந்தாள். ஆனால் நெறிதவறிய கணவனை நொந்தாளில்லை. அவனது வாழ்வே பெரிதென மதித்தாள். அவன் கள்வனல்லன் என்பதை நிரூபிக்க முன்வின்றாள். அவன் இறந்தான். இவளும் பின்பற்றினாள்.

இனி சிறை இருந்த செல்வி சீதையின் மனைமாட்சியைப் பார்ப்போம். சீதை தமிழ்நாட்டுப் பெண் அல்ல. எனினும் கம்பர் அவளைத் தமிழ்ப் பெண்கட்கு ஓர் திலகமாகவே நமக்குக் காட்டுகின்றார். எவ்வளவு துன்பம் ஏற்பட்டாலும், அதைப் பொறுத்துக் கொள்ளும் அபார சக்தியும், அளவற்ற சகிப்புத்தன்மையும், பெண்களுக்கு இயல்பாக அமைந்துள்ளன என்பதை, மற்றவற்றைப் போலவே சீதையின் வரலாறும் நமக்கு விளக்குகின்றது.

ராமன் காட்டுக்குப் புறப்படுகிறான். சீதையும் உடன்வருவேன் என்றாள். காடு எப்படி இருக்கும் என்பதை அவள் அறியாள். அயோத்தி நகரத்து வாயிலைக் கடக்கு முன்னரே, 'காடு எங்கிருக்கிறது?' என்று கேட்டவள். நாயகன் வனத்துக்குப் போகிறான் என்பதும், அரசுரிமையை இழந்துவிட்டான் என்பதும் சீதைக்குத் துன்பத்தைக் கொடுக்கவில்லையாம். 'நான் வனம் போகிறேன். நீ வருந்தாதிரு' என்ற சொல்லை அவளால் பொறுக்க முடியவில்லை என்கிறார் கம்பர்.

நாயகன் வனம் நண்ணலுற்
றானென்றும்
மேய, மண்ணிழந்தானென்றும்,
விம்மலள்,
நீ வருந்தலை, நீங்குவன்
யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத்
தேம்புவாள்.

'உன்னுடைய பிரிவை விடவா காடு சுடப்போடுகிறது?' என்று சீதை கேட்டுக்கொண்டே போய், ஒரு மரவுரியை எடுத்துச் சுற்றிக்கொண்டு ராமனுக்குப் பக்கத்திலே வந்து நின்றாள். காடாக இருந்தாலென்ன? நாடாக இருந்தாலென்ன? ராமனிருக்குமிடம் அயோத்தியென்று கருதிவிட்டாள். குழப்பமில்லை; ஒரு வினாடியில் தீர்க்கமான முடிவு. இன்பத்தின் சிகரத்திலிருக்கும் ராஜாத்தி துன்பத்தின் முடிவான வாழ்க்கையை, அலட்சியமாக மகிழ்ச்சியாக வரவேற்கிறாள். தெரியாத்தனமாக அல்ல; தியாகத்தால்.

இலங்கையில் அரக்கியர் குழாத்திடையே, புலிக்கூட்டத்தினிடையே அகப்பட்ட மான்போல் தவித்துக்கொண்டிருக்கிறாள் சீதை. அவளது மனம் துன்பத்தையே துணைப்பற்றியிருக்கிறது. இந்நிலையில் வனத்தில் அனுமன் சீதையைக் காண்கிறான். அவளது தோற்றம் அநுமனது இதயத்தை உருக்கிவிட்டது. அவளை அப்பொழுதே தூக்கிக்கொண்டு போய் ராமனிடம் சேர்த்துவிட எண்ணினான். ஆனால் அதற்குச் சீதை இசையவில்லை. அந்த எண்ணத்தை ஒரு விண்ணப்பமாக அனுமன் வெளியிடுகிறான். அநுமன் நினைக்கிறபடி தன்னை எடுத்துச்சென்று ராமனிடம் சேர்த்து விடுவான் என்பதில் ஐயப்படவில்லை. சொல்கிறாள்: 'இராவணன் என்னைப் பிறர் அறியாது வஞ்சித்து எடுத்து வந்ததுபோல, நீயும் என்னைப் பிறர் அறியாமல் எடுத்துச் செல்வது இழிவல்லவா? அது இராமனுக்குப் பெருத்த அவமானமும் ஆகுமன்றோ? அவன் புகழுக்கு மாசு உண்டுபண்ணக்கூடாது. தவிர, என்னைக் காதல் நோக்குடன் நோக்கிய ராவணனுடைய கண்களைப் போர்க்களத்தில் காக்கைகள் கொத்தித் தின்பதைக் காணவேண்டாமா?' என்று கேட்கிறாள். துன்பக்கடலில் கிடந்து தவித்தாலும் சோரவாழ்வை வெறுக்கிறாள். வீர வாழ்வை விரும்புகிறாள். விடுதலை வீரத்தில் வரவேண்டுமென்கிறாள்.

கொண்டபோரின், எங் கொற்றவன்
வில்த்தொழில்
அண்டர் ஏவரும் நோக்க, என்
ஆக்கையைக்
கண்ட, போர் அரக்கன் விழி,
காகங்கள்
உண்டபோதன்றி, யான் உளன்
ஆவனே.

## "இந்தியத் தலைவர்களை விடுவிப்பீரா?"

### ஸர் வேவலிடம் இந்திய நிருபரின் கேள்விகள்

லண்டனிலுள்ள யுனைடெட் பிரஸ் விசேஷ நிருபருக்கு, இந்திய வைஸ்ராயாக நியமிக்கப்பட்டிருக்கும் ஸர் வேவல் சமீபத்தில் ஒரு பேட்டியளித்தார். அப்போது நிருபர் பல கேள்விகளைக் கேட்டார். அவற்றை மிக நுணுக்கமாகப் பார்ப்பதாக ஸர் வேவல் கூறியதன்றி வேறு எவ்விதப் பதிலும் அளிக்கவில்லையாம். லண்டனிலுள்ள இந்தியப் பத்திரிகைக்காரருக்கு ஸர் வேவல் பேட்டியளித்தது இதுதான் முதல் தடவையாம். கேள்விகளில் முக்கியமான சில வருமாறு:—

அட்லாண்டிக் சாஸனம் இந்தியாவுக்குப் பொருந்துமா? இந்தியாவில் யுத்தத்துக்குப் பின் புனருத்தாரண விஷயமாக என்னென்ன நன்மைகள் கிடைக்கும்? ஐந்து வருடத் திட்டம் இந்தியாவுக்குண்டா? மோட்டார், லாரி, ரேடியோ, விமானங்கள், எஞ்சின்கள் இவற்றை இந்தியா தயாரிக்க முடியுமா? இந்தியக் கலைகள் உலக முழுவதும் பிரசித்தி பெறும்படி என்ன செய்ய முடியும் என்று நீங்கள் நம்புகிறீர்கள்? யுத்தம் முடியு முன்பு, அரசியல் முன்னேற்றம் ஏற்பட வழியுண்டா? வைஸ்ராய் நிர்வாக சபை இந்திய மயமாகுமா? காங்கிரஸ் தலைவர்கள் விடுதலை அடையவும் ஏதேனும் வழியுண்டா?



Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA)

